# பெண்களால் எதுவும் செய்ய முடியும்

ஆசிரியர்- நார்மா க்ளென்

தமிழில்- சபேசன் மருதப்பா



# பெண்களால் எதுவும் செய்ய முடியும்

படங்கள்- ராய்



“இப்போது நாம் மருத்துவமனை விளையாட்டு விளையாடலாம்” என்றான் ஆடம் சிமித் . “நான் டாக்டராக இருப்பேன் நீ நர்சாக இரு” என்றான். மரினாவின் கிண்டர்கார்டன் வகுப்பில் ஆடம்தான் அவளின் சிறந்த நண்பன், அவர்கள் பள்ளிக்கு பஸ்ஸில் ஒன்றாக சென்றார்கள் தோட்டத்திற்கு ஒன்றாக சென்று மீன் பிடிப்பதாக நடித்தார்கள், பட புதிரில் துண்டுகளை ஒன்றாக சேர்த்து சிங்க உருவத்தை உருவாக்கினார்கள். ஆடம் சொல்லும் விளையாட்டை விளையாட மரினாவிற்கு எப்போதும் பிடிக்கும். ஆனால் இம்முறை “நானும் டாக்டராக இருக்க விரும்புகிறேன்” என்றாள் “நான் டாக்டராக இருக்கும்போது நீ டாக்டராக இருக்கமுடியாது” என்றான் ஆடம்.

”ஏன் “ என்றாள் மரீனா. ”இரண்டு டாக்டர்கள் இருக்க முடியாது” என்றான் ஆடம். ”நீ நர்சாக இரு நான் டாக்டராக இருக்கிறேன்“ என்றான் ஆடம். அவன் டாக்டருக்கான அந்த வெள்ளை உடுப்பை சட்டைத்துணிகள் இருந்த அந்த பெட்டியிலிருந்து எடுத்து போட்டுக்க்கொண்டான்.

“பெண்கள் என்றால் எப்போதும் நர்ஸ்தான் பையன்தான் எப்போதும் டாக்டர்” என்றான். ”ஏன் அப்படி?” என்றாள் மரீனா. ”அது அப்படிதான் இருக்கிறது” என்றான் ஆடம். “ஸ்டெதஸ்கோப்பை எடுத்துகொள்ளவா நர்ஸ்” என்றான்.





அன்று இரவு சப்பாடு சாப்பிடும்போது மரீனா அவள் அப்பாவிடம் கூறினாள் “ஆடம் சோபால எனக்கு பிடிக்கவே இல்லை” என்றாள். ”அப்படியா அவனை உனக்கு பிடிக்கும் என்றல்லவா நினைத்தேன்” என்றார். ”பொதுவாக பிடிக்கும்தான்.ஆனால் அவன் இன்று என்ன சொன்னான் தெரியுமா ?” என்றாள். “என்ன ?” என்று அப்பா கேட்டார். “பெண்கள் டாக்டர் ஆகவே முடியாது வெறும் நர்சாக மட்டும்தான் இருக்க முடியும்” என்றான். “நல்லது, சிறுபிள்ளைத்தனமான பதில்” என்றார் அப்பா. “பெண்கள் டாக்டராக இருக்க முடியுமே” என்றார் அப்பா. “முடியுமா ?”என்றாள் மரீனா .

“நிச்சயமாக முடியும்” என்றார் அப்பா. “உனது அத்தை ரோசா டாக்டர்தானே, உனக்கு தெரியுமே” என்றார் அப்பா. “ஆனால் உண்மையாகவா ?” என்றாள் மரீனா. “ஆமாம், அவள் டாக்டராக இருப்பது அத்தனையும் உண்மை”என்றார் அப்பா.
“அவள் மருத்துவமனையில் வேலை செய்கிறாளா, வெள்ளை சீருடை அணிகிறாளா?” என்று விபரம் கேட்டாள் மரீனா.
“ஆமாம்” என்றார் அப்பா.
“உண்மையில் நீ பிறந்த அந்த மருத்துவமனையிலேயே அவள் வேலை பார்க்கிறாள். அவள் அங்கு என்ன செய்கிறாள் என்று உனக்கு தெரியுமா”,
“என்ன ?” என்றாள் மரீனா. “அவள் ஒரு அறுவை சிகிச்சை மருத்துவர். அது எவ்வளவு
கடினம் உனக்கு தெரியுமா ?”.



மறுநாள் பள்ளியில் ஆடமிடம் மரீனா கூறினாள் “எனக்கு ஒரு அத்தை இருக்கிறாள் அவர் ஒரு டாக்டர். அதுவும் அறுவை சிகிச்சை டாக்டர்.” “அவர் உண்மையான டாக்டரா” ஆடம் தெரிந்துகொள்ள விரும்பினான். “ஆமாம் அவர் உண்மையான டாக்டர், அவர் எங்கள் வீட்டிற்கு இரவு சாப்பிடவருவார். வெள்ளை சீருடைதான் அணிந்து வருவார். நிறைய பெண்கள் டாக்டராக உள்ளார்கள், நானும் டாக்டராவேன். நான் மிருகங்களை கவனித்துக்கொள்வேன்” என்றாள். “அதற்கு பெயர் மிருக சிகிச்சை டாக்டர்” என்றான் ஆடம். அவனுக்கு நிறைய வார்த்தை தெரிந்து இருந்தது.

“நான் சொந்த மருத்துவமனை வைத்திருப்பேன், நாய்களும் பூனைகளும் என்னை பார்க்க வரும். நான் அவைகளை நலமாக்குவேன். நான் அப்படிப்பட்ட டாக்டராகத்தான் இருப்பேன்” என்றாள் மரீனா.





“நான் டாக்டராக விரும்பவில்லை என்றான்” ஆடம். ”பிறகு நீ என்னவாக விரும்புகிறாய்” என்றாள் மரீனா. “நான் ஒரு விமான ஓட்டியாகலாம்“ என்று விரும்புகிறேன்” என்றான் ஆடம். ”என்ன நீ சொந்த விமானம் வைத்து கொண்டு ஒவ்வொரு இடத்திற்கும் செல்வாயா“ என்றாள். ”ஆமாம்” என்றான் ஆடம். நாம் ஏன் இப்போதே விமானம் ஓட்டக்கூடாது” என்றான் ஆடம். “சரி” என்றாள் மரீனா “எப்படி செய்வது” என்று கேட்டாள்.



“நல்லது. இதுதான் விமானம், நான் முன்பக்கம் ஓட்டுநர் இடத்தில் உட்கார்ந்து கொள்கிறேன்” என்றான் ஆடம் . “நான் என்ன செய்ய என்றாள்” மரீனா. “நீதான் விமான பணிப்பெண், பின்புறம் நடந்துசென்று மக்களுக்கு குடிக்க எதாவது கொடு” என்றான். எனவே மரீனா பழைய பேப்பர் கப்புகளை எடுத்து அதில் தண்ணீர் ஊற்றி, கற்பனை பயணிகளுக்கு  கொடுத்தாள். ஆனால் கொடுக்கும் முன் டீ, காபி, பழரசம் வேண்டுமா என்று கேட்டாள்.



ஆடம் இருக்குமிடம் சென்று “என்ன செய்து கொண்டடிருக்கிறாய்” என்றாள். “நான் இன்னும் விமானம் ஓட்டிக்கொண்டே இருக்கிறேன் என்றான்”. நாம் இந்த இடத்திற்கு வந்து விட்டோம் திடீரென்று இறங்க வேண்டும் நன்கு பார்த்துக்கொள்.”என்றான்.

“உனக்கு எப்படி என்று தெரியுமா .” என்றாள் மரீனா” என்ன என்று கேட்டுக்கொண்டே இறங்கவேண்டிய இடத்தை பார்த்துக்கொண்டே இருந்தான் ஆடம். “நானும் விமான ஓட்டியாக வேண்டும்” என்றாள் மரீனா. “உன்னால் முடியாது” என்றான் ஆடம். “ஆகவேண்டும் என்று நினைத்தால் என்னால் முடியும்” என்றாள் மரீனா. “பெண்கள் விமான ஓட்டியாக முடியாது” என்றான் ஆடம். “அவர்கள் பணிப்பெண்ணாக மட்டும்தான் ஆகமுடியும்” என்றான் ஆடம்.
ஆனால் அந்த வேலை மந்தமானது என்று கூறிவிட்டு அவன் கற்பனையில் விமானம் ஓட்ட ஆரம்பித்துவிட்டான்.





அன்று இரவு படுக்கையில் அம்மாவிடம் “ஆடம் மிகவும் கெட்ட பையன்” என்றாள் மரீனா. “அப்படியா ?” என்றாள் அம்மா. “அவன் என்ன செய்கிறான்” என்றாள் அம்மா. “பெண்கள் விமானம் ஓட்டமுடியாது என்று கூறுகிறான்” என்றாள் மரினா. அவர்கள் பணிப்பெண்களாக மட்டும்தான் ஆக முடியம் என்றான் ஆடம்”. “அது உண்மையில்லை” என்றாள் அம்மா. ”பிறகு அவன் ஏன் அப்படி கூறுகிறான்” என்று மரினா கேட்டாள். “ஏனென்று தெரியவில்லை ஆனால் இன்றைய செய்தித்தாள்களில் ஒரு பெண் படம் இருந்தது அவள் பதினைந்து ஆண்டுகளாக அவளின் சொந்த விமானத்தை ஓட்டிக்கொண்டுஇருக்கிறாள்.”



“அவள் மக்களோடு பறந்து செல்கிறாளா? என்று மரீனா கேட்டாள். “ஆமாம்” என்றாள் அம்மா. “அவள்தானே ஒட்டுகிறாள்?” என்றாள் மரினா. “ஆமாம் அவளுக்கு துணை விமானி ஒருவர் உண்டு. விமானிகள் எப்போதும் துணை விமானிகள் உதவியோடுதான் பறக்கிறார்கள்” என்றார் அம்மா. “அம்மா” என்றாள், “என்ன அன்பே” என்றாள் அம்மா. நான் விமானியாக இருந்தால் நீயும் அப்பாவும் என்னுடன் என் விமானத்தில் பறப்பீர்களா“ என்றாள். ”நிச்சயமாக” என்றாள் அம்மா. நான் நல்ல விமானியாக இருப்பேனா என்று அம்மாவிடம் கேட்டாள் ஆமாம் என்று எண்ணுகிறேன் என்றாள் அம்மா.

மறுநாள் பள்ளியில் ஆடத்திடம் மரினா கூறினாள் “நான் அந்த பத்திரிக்கையில் வந்த பெண் விமானிபோன்று விமானியாக போகிறேன் “ நீ
என் துணை விமானியாகலாம்” என்றாள். “யார் அந்த பெண்” என்றான் ஆடம்
“நீ அவர் படத்தை பத்திரிகையில் பார்க்கவில்லையா. அவள் விமானத்தில் எல்லாம் உள்ளது, அவள் அப்பா, அம்மா அவளுடன் பயணம் செய்கிறார்கள்.
“அங்கு பணி  செய்பவர்கள் யார்” என்றான் ஆடம். அது சுயசேவை விமானம், பின்புறம் ஒரு எந்திரம் உள்ளது. அங்கு உனக்கு தேவையான குளிர் பானங்கள் எல்லாம் இருக்கும். “இது நல்ல யோசனையாக இருக்கிறது” என்றான் ஆடம். அவன் மரினாவை விமானியாகவும் தன்னை துணை விமணியாகவும் ஏற்றுக்கொண்டான். வரை படத்தை பார்த்து எங்கு செல்லவேண்டும் என்று கூறினான். கிட்டதட்ட திடீரென்று இறங்க நேரிட்டுவிட்டது ஆனால் புல்வெளியில் இறங்கி அனைவரும் பாதுகாப்பாக இருக்கும்படி மரீனா  பார்த்துக்கொண்டாள்.






அன்று பள்ளியில் ராஜா, ராணி கதை படித்தனர். பேருந்தில் வீடு திரும்பும் போது , ராஜா ராணியாக இருந்தால் என்ன ? என்றாள் மரீனா. நீ நீளமான சிவப்பு துணி அணியாளம், தலையில் மஞ்சள் கிரீடம் இருக்கும். ஆடம் தலையை ஆட்டிவிட்டு, "அது நன்றாக இருக்காது, எப்படியோ ராஜாவும் ராணியும் ஒன்றும் செய்யப்பபோவதில்லை. அது சோம்பல் தரும்" என்றான்.

“ஆமாம் அது உண்மைதான், பிறகு யாராக வேண்டும்?” என்றாள் மரீனா. “ஜனாதிபதி, அது ராஜாவைவிட நன்றாக இருக்கும்” என்றான் ஆடம். “யாருக்கு ஜனாதிபதி” என்றாள் மரீனா. “சும்மா ஜனாதிபதி” என்றான் ஆடம். “சும்மா ஜனாதிபதியா” என்றாள் மரினா. “ஆமாம்” என்றான் ஆடம். “நீ ஜனாதிபதியானால் என்ன செய்வாய்?” என்றாள் மரினா. “நான் ஒரு பெரிய அறையில் விரிப்புகள் மேலுள்ள டேபிளில் அமர்ந்து பேப்பர் களில் கையெழுத்து போடுவேன்” என்றான் ஆடம். “நான் என்ன சொல்கிறேனோ அதை அனைவரும் செய்தாக வேண்டும்” என்றான் ஆடம். “அப்படியா, நாளை ஜனாதிபதி விளையாட்டு விளையாடலாம்” என்றாள் மரீனா. “சரி” என்றான் ஆடம். “ஒன்றுமட்டும் நீ ஜனாதிபதியினால் நான் யாராக இருப்பேன்?” என்றாள் மரினா. “நீ என் மனைவியாக இருப்பாய்” என்றான். “நான் உன் மனைவியாக இருந்தால் நான் என்ன செய்வேன்?” என்றாள் மரீனா.



“நல்லது, நீ சமைப்பாய், நான் வீட்டிற்குவரும்போது என் பத்திரிகைகளை தயாராக கொடுப்பாய், சில நேரங்களில் என்னுடன் காரில் பயணப்படுவாய். மக்கள் கைகளை ஆட்டி நமம்மீது வண்ண தாள்களை வீசுவார்கள்” என்றான். “அது வேடிக்கையாக இருக்கும்” என்றாள் மரீனா. “நீ மட்டும்தானா ஜனாதிபதி?” என்றாள் மரினா. “ கவனத்தில்கொள், பெண் ஜனாதிபதியே இல்லை என்றான்.





அன்று  மரீனா சாப்பாட்டின்போது, அம்மாவிடம் கூறினாள் “இந்த ஆடம்மை என்ன செய்வது என்று புரியவில்லை. எப்போதும் உபயோகம் இல்லாத வார்த்தைகளையே கூறுகிறான்” என்றாள். “அவன் இன்றைக்கு என்ன உன்னிடம் கூறினான்” என்றார் அப்பா.  “பெண் ஜனாதிபதியே ஒருபோதும் இல்லை” என்கிறான். என்றாள் மரீனா. சற்று நேரம் அமைதிக்கு பின். “அவன் ஒரு விபரம் இல்லாத பையன்தானே?” என்றாள் மரினா. “ஆமாம், அது உண்மைதான் அமெரிக்காவிற்கு  பெண் ஜனாதிபதி ஒருபோதும் இருந்ததில்லை” என்றாள் அம்மா. “மற்ற இடங்களிலில் இருந்திருக்கிறார்களா?” என்றாள் மரினா. “மற்ற நாடுகளில் முக்கியமான பெண் தலைவர்கள் இருந்திருக்கிறார்கள்” என்று அப்பா சொன்னார். “திருமதி இந்திராகாந்தி இந்தியாவில் , திருமதி மேயர் இஸ்ரேலில்”




கோல்டா மேயர் இந்திராகாந்தி

அடுத்தநாள் காலை ஆடம்மிடம் மரினா சொன்னாள், ”நீ விமானியாகவோ, டாக்டராகவோ ஆகிக்கொள் நான் என்னவாக போகிறேன் தெரியுமா?” என்றாள்
“என்ன ?” என்றான் ஆடம் . “நான் அமெரிக்காவின் முதல் பெண் ஜனாதிபதியாக போகிறேன். நீ என் கணவராகலாம். “நான் என்ன செய்ய வேண்டும்” என்றான் ஆடம். “நீ நமது விமானத்தை ஓட்டு, என்னை வெவ்வேறு இடங்களுக்கு விமானத்தில் அழைத்துசெல். அந்த இடங்களுக்கு சென்று நான் பேசுவேன்” என்றாள். “அப்படியானால் உன்னை பொறுத்தவரை பெண்கள் அவர்கள் விரும்புகிற என்னவாக வேண்டுமானாலும் ஆகலாம்” என்றான் ஆடம்.
“ ஆமாம், சரியாக சொன்னாய்” என்றாள் மரினா. “நான் பேசுவதற்காக என்னை விமானத்தில் கூட்டி செல்வாயா” என்றாள்.



“சரி . ஆனால் பேசிவிட்டு திரும்பும்போது நீ என்னை விமானத்தில் கூட்டிவரவேண்டும் அப்போதுதான் என் பேச்சை நான் கொடுக்கமுடியும்”
என்றான். “சரி” என்றாள் மரீனா. ஆடம் மரினா எங்கு பேசவேண்டுமோ அங்கு விமானத்தில் கூட்டிச்சென்றான். பிறகு மரினா அங்கு பேசினாள்.



பிறகு மரினா, ஆடம் எங்கு பேச
வேண்டுமோ அங்கு விமானத்தில்
கூட்டிச்சென்றாள்.



பிறகு ஜனாதிபதி மாளிகையில் பெரிய விருந்து ஒன்று ஏற்பாடாகியிருந்தது .
கொக்ககோலா, லாலிபாப், பீட்ஸா ரோல் இவை எல்லாம் இருந்தன. இரண்டு ஜனாதிபதிகளும் விருந்து மிகவும் சுவையாக உள்ளது என்று எண்ணினார்கள்.



